



உ
கணபதிதுணை
திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திரபரிபாலனம்


| தொகுதி உ | விக்கிரமஹூ மார்கழிமீ 1940 டிசெம்பர் | பகுதி ச |
|---|---|---|


பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## கல்யாணசுந்தர மூர்த்தம்

### சிவபெருமான் உமாதேவியாரைத் திருமணம் செய்தருளியது

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் "ஊழிதொ றாழிமுற்று முயர்பொன் னெடித்தான் மலை" எனத் திராவிட சுருதியிற் கூறியவாறு ஊழிக்காலத்திலும் தனது வலிமை கெடாது நின்று வளர்ந்தோங்கா நிற்கும் நிருமலமாகிய திருக்கைலாசமலையிலே, செம்பொற்றிருக்கோயிலிலே, திவ்ய சிங்காசனத்தில் உமாதேவியார் தமது வாமபாகத்தின் மேவ, அளவிறந்த பெருங்கருணையோடு சிவபெருமான் எழுந்தருளியிருந்தார். இவ்வண்ணம் வீற்றிருக்கும்போது உமாதேவியார் எழுந்து நின்று வணங்கி, "தலைவரே! இற்றைவரை, தேவரீரை எண்ணாத தக்கன் மகள் எனப் பொருள்படும் தாக்ஷாயணி என்னும் நாமத்தைப் பெற்றேன்; இனிமேல் அதைப் பரித்தற்கு வெருவினேன்; அப் பெயர் அகலும்படி அருளுக" என்று வேண்டினார். சிவபெருமான்

"பெண்ணே! இமயமலை அரசன் தன் மகளாய் உன்னைப் பெறுமாறு தவஞ்செய்கின்றான்; அவன்பாற் சென்று வளர்ந்திடுதி; யாம் பின் வந்து மணம் செய்வோம்" என்று கூறியருளினார். உமாதேவியார் விடைபெற்றுக்கொண்டு இமயமலையிற் சேர்ந்து ஆண்டுள்ள ஒரு தடாகத்திலே கமலமலரிற் சிறு குழந்தையாய் எழுந்தருளியிருந்தார். அங்கே தவம்புரிந்து நின்ற இமயமலை அரசன் அக்குழந்தையைக் கண்டெடுத்து மகிழ்ந்து, தன் மாளிகைக்குக் கொண்டுபோய்த் தனது துணைவியாகிய மேனையின் கரத்திற் கொடுத்தான். அவள் தொழுது வாங்கி வளர்த்து வருவாளாயினள்.

இவ்வாறே உமாதேவியார் இவரிடத்தே வளர்ந்து ஐந்து வயசு சென்ற பின் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய எண்ணி, தந்தையாகிய அரசனோடு தமது கருத்தைத் தெரிவித்தார். இமவான் பார்ப்பதிஅம்மையாரை நோக்கி, "அன்னையே! நீ தவஞ்செய்தற்கு ஒத்த பருவம் அன்று இது; இக் கருத்தைத் தவிருதி" என்றான். அம்மையார் திருநகை செய்து "யாவரேயாயினும் சுதந்திரராகிய சிவபெருமானாலே காக்கப்படுவதன்றித் தம்மாலும் பிறராலும் காக்கப்படுவதில்லை; யான் தவஞ்செய்வேன்; மறுது விடைதரக்கடவாய்" என்றார். மலையரசன் அதற்கிசைந்து, அவ் வரையின் ஒரு பக்கத்திலே தவச்சாலை அமைத்துக் கன்னியர் பலரோடும் பார்ப்பதியாரை அங்கே விடுத்தான். அம்பிகை அமலனைச் சிந்தித்துத் தவஞ் செய்து கொண்டிருந்தார்.

சிவபெருமான், இமயமலைமீது தவஞ் செய்யும் பார்ப்பதி அம்மையாரிடம் ஒரு விருத்தப்பிராமண வடிவங்கொண்டு சென்றருளினர். தவச்சாலையை அடைந்த அவ் வயோதிக வேதியருக்கு விசயை யென்பாள் ஓர் ஆசனமிட்டு இருத்தினாள். பராபரையாகிய தேவியாரும் பக்கத்திலே நின்றார். சிவபெருமான் "பெண்ணே! உன் சரீரத்தழகெல்லாம் அழிய அருந்தவஞ் செய்கின்றாய். நீ யாது விரும்பினை? சொல்" என்றார். விசயை என்பாள் "சுவாமீ! இவ் வம்மையார் தம்மைச் சிவபெருமான் மணஞ் செய்து இடப்பாகத்தில் இருத்திக்கொள்ளும் பொருட்டுத் தவஞ் செய்கின்றார்" என்றாள். சிவபெரு

மான் நகைத்து, "அரிபிரமர்களாலும் தேடி அறிதற்கரிய கடவுள் இவள் தவத்துக்கு எய்துவாரா? எய்தினும் மணம் செய்வாரா? தவஞ் செய்வதால் ஒரு பயனுமில்லை; தவத்தை விடுதலே இவளுக்குக் கடன்" என்றார்.

அதுகேட்ட உமாதேவியார் கோபங்கொண்டு "பரமனார் என் கருத்தை முடியாது விடினும் நான் தவத்தை விடுவதில்லை; மூத்தமையால் மயங்கினாய், பித்தனோ நீ" என்றார். அக்காலை விருத்த வேதியர், சிவபெருமானை இகழ்ந்து கூறினார். உமாதேவியார் "நீதியற்றவனே! போதி போதி" என்று சினந்து கூறினார். உடனே, அந்தண வடிவங்கொண்ட கள்வராகிய அமலனார் "யான் இங்கு வந்தது உன்னை மணந்துகொள்ளுதற் பொருட்டேயாம்" என்றார். உமையம்மையார் இடரின் மூழ்கி, "இக்கிழவன் போகான்; யானே போவேன்; என்று குன்றின் ஒருபுடையாசப் போயினார். அப்பொழுது சிவபெருமான் விடையின்மேற் றோன்றிக் காட்சி கொடுத்தருளினார். அம்மையார் அது கண்டு நாணொடு வணங்கி, "அடியேன் றேவரீரை அறியாதுரைத்த பிழையைப் பொறுத்தருளுக" என விண்ணப்பித்தார் சிவபெருமான்: "நாம் அவைகளைத் துதி வாசகங்களாகக் கொண்டோம்; நீ சோர்வடையாதே; நாம் நாளைத்தினம் நேயத்தோடு மணம்புரிய வருவோம். நீ தவம்புரிதலை நீங்குதி" என்றருளிச்செய்து மறைந்தருளினார். ஆங்கு நின்ற மகளிர் சிலர் மலைவேந்தன் முன்பு போய் நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். அவன் சந்தோஷசாகரத்தில் மூழ்கி, தேவியாரைத் தன் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு போயினான்.

சிவபெருமான் திருக்கைலாசமலையை அடைந்து, சப்தரிஷிகளையும் நினைத்தருள அவர்கள் வந்து வணங்கி நின்றார்கள். அமலநாயகர் அவர்களை நோக்கி, "நீவிர் இமயகிரிராஜனிடத்தே சென்று பார்ப்பதியை நமக்கு விவாகஞ் செய்து தரும்வண்ணம் பேசிக்கொண்டு வரக்கடவீர்கள்" என்று கட்டளையிட்டருளினார். இருடிகள் இமயமலையை அடைந்தார்கள். இமவான் எதிர்கொண்டு ஆசனத்தில் அன்போடு இருத்தி, "சுவாமிகாள்! நீங்கள் அடியேனிடத்தில் வந்த நிமித்தம் யாது? சொல்லுங்கள்". என்றான். முனிவர்கள் பரமனார் திருவாய்மலர்ந்தருளியமையைக் கூறினார்கள். அரசன் அதற்கு இசைந்துகொண்டான்.

அந்த இருஷிகள் எழுவரும் இறைவனை அடைந்து, இமயமலை அரசன் இசைந்தமையை விண்ணப்பித்து, தங்கள்தங்கள் பதவிகளைச் சேர்ந்தார்கள்.

இமயமலைவேந்தன் தேவகம்மியனைக் கொண்டு நகரத்தை அலங்கரித்து, பசுபதியினுடைய திருமுன்னிலையில் வந்து பணிந்து, "எந்தாய்! சுபதினமாகிய உத்தரம் இன்றேயாகும். எனது மகளை மணம் செய்துகொள்ளும்படி வந்தருளுக" என்று பிரார்த்தித்தான். சிவபெருமான் "நீ முன்னே செல்; நாம் இமயத்துக்கு எழுந்தருளுவோம்" என்று கூறியருளினர். அரசன் தனது நகரை அடைந்தான்.

சிவபெருமான் திருநந்திதேவரை நோக்கி, நமது மணத்தைத் தரிசிப்பதற்கு உருத்திரர், தேவர் ஆதிய யாவரையும் இங்கே தரக்கடவாய்" என்று பணித்தருளினர். திருநந்திதேவர் அவர்களைத் திருமணத்துக்கு வரும்படி நினைத்தார்; நினைத்தலும், காலாக்கினி ருத்திரர் முதலிய ருத்திர கூட்டத்தினரும், தேவர்கள், முனிவர்கள் முதலிய யாவரும் திருக்கைலாசமலையில் வந்தார்கள். அப்பொழுது பிரமதேவர் சிவபெருமான் அணிந்துகொள்ளுமாறு மகுடம் முதலிய ஆபரணங்களை வைத்து வணங்கினர். சிவபிரான்: "பிரமனே! யாம் இவற்றை அணிந்தனபோல மகிழ்ந்தோம்" என்று அவற்றைத் தொட்டருளினர். பின்பு தமது திருமேனியிலுள்ள சர்ப்பங்களையே ஆபரணங்களாமாறு திருவுளங்கொண்டருள, அவை அவ்வாறுயின. சிவபெருமான் இடபவாகனத்தில் இவர்ந்து திருக்கைலாசவெற்பை அகன்று இமயமலையை அடைந்து, திருமணச்சாலைக்கு முன் வாகனத்தினின்றும் இறங்கியருளினர்.

அப்பொழுது மேனை, எம்பெருமானது திருவடிகளைக் காமதேனுவின் பாலினல் விளக்கிக் கைதொழுது திரும்பினள். உடனே பரமசிவன் திருநந்திதேவர் கொண்டுவந்து வைத்த பாதுகையில் தமது அருமைத் திருவடிகளைச் சேர்த்தி, பல வாத்தியங்கள் இயம்ப, யாவரும் அயலிற் சூழ்ந்து வர, திருமணச்சாலையிற் சென்று சிங்காசனத்தின்மீது விற்றிருந்தருளினர்.

மலையரசனது ஏவலினல் உமாதேவியார், தேவமகளிர்கள் தொண்டு செய்ய, திருமணச்சாலையை அடைந்து, சிவபெருமா

னுடைய திருவடிகளை வணங்கி, அவருடைய ஆஞ்ஞையினாலே வீற்றிருந்தார். பருவதராஜன் பரமசிவனுடைய திருப்பாதங்களுக்குப் பூசை செய்து, மேனை காகநீர் வார்க்க, வேதமந்திரங்களைச் சொல்வித் தத்தஞ்செய்தான். அப்பொழுது தும்புருவும் நாரதரும் இசை பாடினார்கள். கணங்கள் வாத்தியங்களை முழங்கினார்கள். மகளிர் பலர் வாழ்த்தெடுத்தார்கள்.

மலையரசன் பால், பழவர்க்கம் முதலியவற்றைத் திருமுன் வைத்து, "எம்பெருமானே! இவற்றைத் திருவமுது செய்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான். சிவபெருமான் அவற்றைத் திருக்கரத்தாற் றொட்டுத் திருவருள் செய்தார். பிரமதேவர் சிவபெருமானை வணங்கி, "ஈசனே! இனிச் செயற்பாலதாகிய விவாகக்கிரியை முற்றுவிக்கும் பொருட்டு அநுமதி செய்தருளுக" என்று பிரார்த்திக்க, சிவபெருமான் திருப்புன்முறுவல் செய்து இசைந்தருளினார். பிரமதேவர் அக்கினி முதலிய உபகரணங்களை வருவித்து, வியாழதருவும் சுக்கிராசாரியரும் பக்கத்தே சூழ, விவாகக் கிரியைகளைச் செய்து முடித்தார். பின்பு திருமால், பிரமா முதலிய அனைவரும் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கினார்கள். இமயமலைவேந்தன், சிவபெருமானுடைய நிர்மாலியப்பொருள்களை அங்குள்ளார் அனைவருக்கும் கொடுக்க அவர்களெல்லோரும் மெய்யன்போடு ஏற்று அவற்றை அணிந்துட்கொண்டு, நம்முடைய வினைகள் இன்றே கழிந்தன என்று பெருமகிழ்ச்சிகொண்டார்கள்.

சிவபெருமான், கௌரியுடன் இடபவாகனத்தின்மீதேறித் திருக்கைலாசமலையை அடைந்து, எவர்க்கும் விடைகொடுத்து, விடையினின்றும் இறங்கிச் சிங்காசனத்தில் வீற்றிருந்தருளினார். அதனால் உயிர்களனைத்தும் இன்னல் நீங்கி இன்பத்தை அனுபவித்துக்கொண்டிருந்தன.

உமாதேவியார் சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்யச் சிவபெருமான் அம்மையார் தம்மிடத்துக் கொண்ட அன்பை உலகினர்க்குக் காண்பித்து உலகத்திலே இல்வாழ்க்கை நிகழ்த்தற்பொருட்டுத் திருமணம் செய்தருளிய காரணத்தால் கல்யாணசுந்தரர் எனவும், வைவாஹ்யமூர்த்தி எனவும் திருநாமத்தை எய்தினர்.

இது பஞ்சவிம்சதி (இருபத்தைந்து) மூர்த்தி பேதங்களுள் ஐந்தாவதும், அஷ்டாஷ்டவிக்ரஹ பேதங்களுள் இருபதாவதுவாம். இம் மூர்த்தியானவர் மூன்று திருக்கண்களும், நான்கு திருப்புயங்களும் உடையராய், ஆரமும் வாகுவலயமும் கடகமும் நீலோற்பலமும் அணிந்தவராய், உமாதேவியாரது கரத்தைத் தமது வலத்திருக்கரத்தாற் கிரகித்தவராய், மழுவும் மானும் பரிசுத்த கரங்களும் வரதகரமு முடையராய்ச் சந்திரசேகரராய் விளங்கி அருள்செய்வர்.

வடமொழிக் காந்தபுராண சம்பவகாண்டத்தும், அதன் மொழிபெயர்ப்பாகிய தமிழ்க் கந்தபுராணத்தும், ஏனைப் புராணங்களிலும் விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளது இத் திவ்விய சரித்திரம்

"தாரமவர்க் கிமவான் மகள்", "மலையான்மகள் கணவன்" "மலையார்தரு மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி—நிலையார்தரு நிமலன்" "இமயப்பாவை—கூறு திருவுருவன்", "மலையாளொடு மன்னுசென்னிப்—பிறையணி செஞ்சடையான்" (திருஞானசம்பந்தசுவாமிகள்) "மாதிசைந்த மாதவமுஞ் சோதித்தான், காண்" (திருநாவுக்கரசுநாயனார்)

"குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு
குறிப்பினொடு சென்றவடன் குணத்தினைநன் கறிந்து
விரும்பும்வரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்;
அரும்பருகே சுரும்பருவ வறுபதம்பண் பாட
வணிமயில்க ளடமாடு மணிபொழில்சூ முயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கண் முகமலருங் கலையநல்லூர் காணே."

(சுந்தரமூர்த்திநாயனர்)

என வரும் திராவிட சுருதிகளின் கருத்தைக் கொண்டதென்பது நன்கு தெளியப்படும். மேலும், கேனோபநிடதத்திலே இமயமலை அரசனுக்குப் புத்திரி என்பதுபற்றி உமாபிராட்டியாரை ஹைமவதி எனக் கூறப்பட்டதும், சுப்பிரபேதாகமத்திலே ஹிமவானுக்குப் புத்திரியாயிருந்தார் என்று செப்பப்பட்டதும் காண்க. இனி, இத் திருக்கோலத்தின் தத்துவார்த்தத்தைச் சிறிது ஆராய்வோம்.

கந்தபுராணத்திலே "இத்திற முயனுத லெல்லே தீர்ந்தநின்–புத்திரர் வீடுறு பொருட்டுப் போனுமால்" (பார்ப்பதி ௫) எனவும், "நற்றிற மேயிது நங்கை சிந்தனே" (ஷை ௬) எனவும்,

மன்னுயிர் புவன மேனே மற்றுள பொருளுக் கொல்லா
மன்னேயா யுதவி நாளு மவற்றினே வளர்த்து நிற்பா
டன்னேயும் வளர்ப்பா ருண்டோ வளர்ந்தது சழக்கே யந்தக்
கன்னிதன் னருளி னீர்மை காட்டினன் போலு மன்றே. (ஷை ௨௬)

எனவும் ஸ்ரீ கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளினமையால், தக்கன்மகள் எனப் பொருள்படும் தாக்ஷாயணி என்னும் பெயரையும், அவனிடை வளர்ந்த சரீரத்தையும் நீக்க முயன்றதும், இமயமலேராஜனிடம் மகளாய்ச் சென்று வளர்ந்ததும், ஆன்மாக்களிடத்து வைத்த அருளினீர்மையாம் என்பதும், அருந்தவஞ்செய்த அரசனிடத்து வைத்த இரக்கமாமென்பதும் உணர்த்தப்பட்டன.

யாகாதிபதியாகவும் அங்கி வடிவினராகவும் விளங்கும் பரமசிவனுர் விண்ணிலும் மண்ணிலும் வசிக்கும் அனேவரும் மணம் செய்யும்போதில் தத்தம் குலாசாரத்துக்கேற்றவாறு கிரியைகளேச் செய்து வழங்கும் ஒழுக்கத்தைக் கைக்கொள்ளுவதற்காகவன்றே தாமும் ஒழுகிக் காட்டியருளினர். அது கந்தபுராணம் திருக்கல்யாணப் படலத்திலே,

படங்கிளர் சேடன் முங்கும் பார்விசும் புறையு நீரா
ரடங்கலு மணஞ்செய் போதத் தவ்வவர்க் கடுத்த தாற்றி
நடந்திடு மொழுக்க மெந்தை நடத்திடல் வேண்டு மன்றற்
சடங்கினி யுளது முற்றத் தண்ணளி புரிதி யென்ருன்.

என வரும் செய்யுளாலும், திருவிளேயாடற்புராணம் திருமணப் படலத்திலே,

இணரெரித் தேவுந் தானே யெரிவளர்ப் பவனுந் தானே
உணவுகொள் பவனுந் தானே யாகிய வொருவன் வையம்
புணர்வுறு போக மூழ்கப் புருடனும் பெண்ணு மாகி
மணவினே முடித்தா னன்னுன் புணர்ப்பையார் மதிக்க வல்லார்.

என வரும் செய்யுளாலும் உணரப்படும்.

எங்குமுள்ள பொருள்களும், அவற்றை ஏற்பவரும், கொடுப்பவரும், சுகத்தைக் கொடுப்பவருமாகிய சிவபெருமான் தமக்கு

அபேதமாய் நிற்கும் அருட்சத்தியைத் தமது அடியவனுகிய கிரிராஜனுக்கு மகளாக்கித் தாம் மருகராய்ச் சென்று அவன் கருத்தை முற்றுவிக்கும்படி எற்றருளியது, அப் பெருமான் பெருங்கருணுவிலாசமுள்ளவர் என்பதைக் காட்டும். இதுபற்றியே ஸ்ரீ கச்சியப்பசிவாசாரிய ஸ்வாமிகள்,

எங்குள பொருளுங் கோளு மீதலுந் தானே யாகுஞ்
சங்கர னுலக மெல்லாந் தந்திடுங் கன்னி தன்னை
மங்கல முறையாற் கொண்ட மலைமகன் கொடுப்ப வென்று
லங்கவ னருளி னீர்மை யாரறிந் துரைக்கற் பாலார்.

என்று திருவாய்மலர்ந்தருளினர். இச் செய்யுளை யொட்டியே அதிவீரராமபாண்டியரும் கூர்மபுராணத்தில் "எங்கணும் பொருளுங் கோளு மீதலுந் தானேயாகும்—கங்கையா னகில மெல்லா மளித்தருள் கன்னி தன்னைச்—செங்கையிற் பற்றித் தீயை வலம் புரிஇச் செய்தா னெல்லா—மெங்கடம் பொருட்டே யென்ப விதுவன்றே வதற்குச் சான்று" என அமைத்துக் கொள்ளுவாராயினர்.

இனிச் சிவபெருமான் பார்வதிதேவியாரை மணந்தாரென்றும் பிரிந்தாரென்றும் கூறப்படுவதின் கருத்தென்னையெனிற் கூறுவாம்:—"‡ ஆண், பெண், அலி என்னும் மூன்றுமல்லாத அநாதிமலமுத்த பதியாகிய சிவத்தையே, சர்வான்மாக்களையுந் தோற்றுவித்தலால், ஆண்பாற்படுத்துப் பிதாவெனவும், சூரியனுக்குக் கிரணம் போல அச் சிவத்துக்கு அபின்னமாகிய சத்தியையே நிமித்தகாரணமாகிய அச் சிவம் அத் தொழில் இயற்றுதற்குத் துணைக்காரணமாயிருத்தலால், பெண்பாற்படுத்து மாதா எனவும், அச் சிவம் அச் சத்தியோடு கூடி உத்தியோகித்துச் சங்கற்பித்தலையே, அவ்வான்மாக்களது தோற்றத்துக்குக் காரணத்தொழிலாகையால் உகந்து புணர்தல் எனவும், அச் சங்கற்பம் இல்லாமையையே பிரிதல் எனவும் சொல்லியதென்று அறிக.

ஆகவே, ஞானந்தானுருவாகிய நாயகனுர் கல்யாணசுந்தர மூர்த்தங் கொண்டது, தமது போகவிச்சையின் பொருட்டன்றென்பதும், போகவிச்சை தீர்ந்தவழியே பாகம் வர முத்தி

‡ சைவதூஷண பரிகாரம்.

சித்திக்குமாதலின், அபக்குவான்மாக்கட்குப் போகத்தை யூட்டித் தொலைத்துப் பாகம் வருவித்தற்காமென்பதும் சித்தித்தவாறு காண்க. இக் கருத்துப் பற்றியே கந்தபுராண ஆசிரியரும் "உலக முய்ந்திட வெம்பிரான் மணம்புரி யுண்மை—புலனதாதலும்" "தொல்லுலகம் வாழ்ந்திடும்படி யேகின னிமையமால் வரைமேல்" "உங்கடம் பொருட்டிலவ் வோங்கல் வைகிய—மங்கையை மணந்து நும் வருத்த நீக்குதும்" என ஆங்காங்கு பிரஸ்தாபித்தருளினர். இப் பொருளை,

"நேரிழையைக் கலந்திருந்தே புலன்களைந்தும் வென்றானை"

என வரும் தேவாரமும்,

"மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
யுலகறியத் தீவேட்டா னென்னுமது வென்னேடீ
யுலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகனைத்துங்
கலைநவின்ற பொருள்களெலாங் கலங்கிடுங்காண் சாழலோ."

என வரும் திருவாசகமும்,

"போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்"

"இமவான் பெற்ற—பெண்ணினைப் புணர்ந்துயிர்க்குப்
பேரின்ப மளித்ததோரார்"

"இடப்பாக மாதராளோ டிசைந்துயிர்க் கின்பமென்று
மடைப்பானு மதுவும்"

என வரும் சித்தியாரும்,

"முன்புல கீன்ற முகிழ்முலைக் கன்னியோ
டின்புறும் யோகி யெழுபுவிக் கரசே"

என வரும் சிதம்பரச் செய்யுட்கோவையும் நன்கு விளக்கும்.

"பாகமதி லுத்தமியை வைத்தல்பழு தென்றாய்
போகமுல குக்கருள் புரிந்தருள வென்றே
மாகமுகி லொத்தகுழன் மங்கையொ டிருந்தான்."

என்றார் பௌராணிகரும்.

போகமூர்த்தியாகிய கல்யாணசுந்தரரைக் குறித்துப் பங்குனி யுத்தரத்தில் விரதமனுட்டிப்போரும், உரிய காலங்களில் திருக்கல்யாண உத்ஸவம் செய்வோரும் விஜயம், ஸ்ரீகரம், மங்க

ளம், கீர்த்தி, தீர்க்காயுள், புத்திரசம்பத்து ஆதியவற்றை எய்து வர் என்று உண்மைநூல்கள் இயம்புகின்றன.

தியானம்

𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑍋𑌗𑌪𑌟𑍍𑌟𑌸𑌹𑌿𑌤𑌂
𑌹𑌾𑌰𑌕𑍇𑌯𑍂𑌰𑌭𑍂𑌷𑌿𑌤𑌂
𑌦𑌿𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌰𑍍𑌵𑍃𑌤𑌾𑌙𑍍𑌗𑌂 𑌪𑌾𑌦𑌕𑌟𑌕𑌯𑍁𑌗𑍍𑌮
𑌸𑍈𑌕𑌹𑌾𑌰𑌭𑍂𑌷𑌿𑌤𑌂।
𑌶𑌂𑌖𑌂 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌪𑌾𑌣𑌿𑌨𑌾 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌂
𑌸𑌵𑍍𑌯𑍇𑌨 𑌸𑌂𑌗𑍃𑌹𑍀𑌤𑌂
𑌟𑌙𑍍𑌕𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑍃𑌗𑌂 𑌵𑌾𑌕𑌾𑌰𑌂
𑌵𑌰𑌦𑌂 𑌸𑌾𑌧𑌕𑌾𑌨𑌾𑌂 ॥

---

# தமிழ்

[கோத்தமங்கலம் சிவஸ்ரீ சோ. நடராஜக்குருக்கள் அவர்கள் எழுதியது.]

உலகத்திலே வழங்கும் பல பாஷைகளுள்ளும் இலக்கண வாய்பு, தெய்வத்தன்மை, தொன்மை, அற்புதச்செயல் ஆதிய வற்ருல் ஒப்புயர்வின்றி விளங்கும் பாஷைகள் ஸம்ஸ்கிருதம், தமிழ் என்னும் இரண்டுமேயாம். ஸம்ஸ்கிருதம், தமிழ் என்னும் இவ்விரு பாஷைகளுக்கும் பரமாசாரியர் சிவபெருமான். சிவபெருமான் ஸம்ஸ்கிருதத்துக்கு இலக்கணம் பாணினிமுனிவருக்கும், தமிழுக்கு இலக்கணம் அகத்தியமுனிவருக்கும் உபதேசித்தருளினுர். அவ்விருவரும் அவ்வுபதேச நன்னெறி கடைப்பிடித்துப் பாணினீயம், அகத்தியம் என்னும் இலக்கண நூல்களைச் செய்தருளினுர்கள்.

திருமந்திரம்

*மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்*
*லேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து*
*ஆரிய முந்தமிழு முடனே சொல்லிக்*
*காரிகை யார்க்குங் கருணைசெய் தானே.*

தேவாரம்

வடமொழியுந் தென்மொழியு மறைக ணான்கு மானவன்காண்

திருவள்ளுவமாலை

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா வுடைத்து.

காஞ்சிப்புராணம்

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயினா ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

பரமசிவ குமாரராகிய அறுமுகக்கடவுளையும் அகத்திய முனிவருக்குத் தமிழுணர்த்திய பரமாசாரியராகப் பெரியோர் சொல்லுகின்றார்கள்.

தமிழ் வழங்கு நிலம் வேங்கடமலைக்குத் தெற்கே தென் கடற்கு வடக்கே கீழைக்கடற்கும் மேலைக்கடற்கும் நடுவே விளங்குந் தென்னாடு. இது தமிழ்நாடு தமிழகம் எனவும் படும்.

தமிழ் தென்னாட்டிலும் ஸம்ஸ்கிருதம் வடநாட்டிலும் மிகுதியாக வழங்குதல் பற்றி இவ்விரு மொழிகட்கும் முறையே தென்மொழி, வடமொழி என்பன காரணப்பெயராயின.

தமிழ்மொழி தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்னும் மூன்று சங்கங்களாலும் ஆராயப்பட்டது. இச் சங்கம் மூன்றையும் தாபித்தவர்கள் பாண்டியமன்னர்கள். சிவபெருமான், குமரவேள் இருவரும் சங்கப்புலவராயிருந்து தமிழ் ஆராய்ந்தனர். முதலிரண்டு சங்கங்களிலுமிருந்து அகத்திய முனிவர் தமிழாராய்ந்தனர்.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

திருக்கோவையார்

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ. ...

அகத்தியமுனிவர் பொதியமலை வாசர்; தமிழ்முனிவர் என்று நூல்களாற் போற்றப்படுபவர். தொல்காப்பியர் முதலிய பன்னிருவருக்கும் ஆசிரியர் தொல்காப்பியர் இயற்றிய இலக்கண நூல் தொல்காப்பியம். சிறந்த இலக்கண நூல் அது.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வையை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்.

இந்தப் பாட்டில் கவி தமிழை ஒரு குழந்தையாக உருவகித்து அதன் வளர்ச்சியை முறையே காட்டியிருக்கின்றார். பொருப்பிலே பிறந்தமை அகத்தியமுனிவர் தமிழாசிரியர் என்பதை உணர்த்தும். தென்னன் புகழிலே கிடந்து என்பது பாண்டியமன்னர்கள் தமிழைப் போற்றிவந்தமையைக் காட்டும். இருப்பதற்குப் பலகை வேண்டுதலின் 'சங்கத்திருப்பிலே இருந்து' எனப்பட்டது. வையை யேட்டிலே தவழ்ந்தமை திருஞானசம்பந்தப்பெருமான் தேவாரத்தை வரைந்தருளி வைவைநதியில் இட்ட ஏடு நீரை எதிர்த்துச் சென்றதையும், நெருப்பிலே நின்றது அவர் தேவாரம் எழுதியிட்ட ஏடு அக்கினியில் வேவாமலிருந்ததையும் குறிக்கும்.

கடைச்சங்கத்திலிருந்து தமிழாராய்ந்தவர்கள் நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பதின்மர். அவர்கள் ஸரஸ்வதியின் அவதாரமாய் உள்ளவர்கள். அவர்களைச் சுந்தரமூர்த்திநாயனார் பொய்யடிமையில்லாத புலவர்கள் என்று துதித்திருக்கின்றார்.

சதுரமாய் இரண்டு சாணளவினதாகிய சங்கப்பலகை யொன்று சிவபெருமான் அவர்கட்குக் கொடுத்தருளினர். அது மெய்ப்புலவர்கட்கெல்லாம் முழம் வளர்ந்து இருத்தற்கு இடங் கொடுப்பது.

முழுதுணர்ந்தருள்மலயான் முனிமொழியுமுத்தமிழும்
பழுதறம்படிபுலவரேறியபலகையொன்றுடையான்— பாரதம்.

கடைச்சங்க காலத்திலே பாண்டியன் பொருட்டு "அன்பி னேந்திணை" என்பது முதலிய அறுபது சூத்திரங்களினல் ஓர் அகப்பொருள் நூல் செய்தருளினர். சிவபெருமான் திருநாமம் இறையனர் ஆதலின் அது இறையனர்அகப்பொருள் எனவும், களவியல் எனவும் பெயர்பெறும். அதற்குப் புலவர் பலரும் உரை எழுதினர். தத்தம் உரையே சிறந்ததென்று ஒவ்வொரு வரும் கூறுவாராயினர். அவ் வுரைகளுள்ளே நக்கீரர் உரையே முருகக்கடவுளுடைய கூறாகிய உருத்திரசன்மராலே சிறந்தது என்று ஏற்றுக்கொள்ளப்பட்டது.

வங்கியசூடாமணி என்னும் சம்பகபாண்டியன் பரந்து வீசிய பெருந்தேவி கூந்தலின் வாசம் இயற்கையோ செயற் கையோ என நாடி இயற்கையே யெனக் கருதி இக் கருத்தமை யக் கவிபாடி வருவாருக்கே கிழி யுரியதாகும் என்று பொற்கிழி யொன்று சங்கமண்டபத்தே தூக்கினன். அக் கிழியும் ஆயிரம் பொன் அடங்கியது. அதன்மேல் அவாக்கொண்ட பலரும் பாடிவந்தனர். பொற்கிழியைத் தருமி என்னும் பிராமணர் பெற்றுய்யும்படி அவருக்காகச் சோமசுந்தரக்கடவுள் பாடி யருளிய

கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே.

என்னும் கவியொன்றே அவன் கருத்துக் கியைவதாயிருந்தது. தருமியும் பொற்கிழி பெற்றனர்.

சிவபெருமான் பாணபத்திரருக்காகச் சேரமான்பெருமா ளுயனருக்கு

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்

செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

என்னும் திருமுகப் பாசுரம் பாடியருளினர்.

சந்தானசாரியராகிய உமாபதிசிவாசாரியருக்கு 'அடியார்க் கெளியன்' என்னும் சீட்டுக்கவி யனுப்பிப் பெற்றான்சாம்பானுக்கு முத்தி கொடுக்கச்செய்தனர்.

சுந்தரமூர்த்திநாயனாரைத் தடுத்தாண்ட பின் அவரைத் தம்மேற் பாடுமாறு சிவபெருமான் பணிக்க, 'அவர் தேவரீருடைய அநந்த குணங்களில் எதை அறிவேன்? எங்ஙனம் பாடுவேன்?' என்ன, 'முன் என்னைப் பித்தன் என்று அழைத்தாய்; ஆகையால், அங்ஙனமே பாடு' எனப் பணிக்க, நாயனாரும் "பித்தா பிறைசூடி" எனப் பாடத் தொடங்கினார். மேலும், 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்' என அடி எடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டத்தொகை பாடுவித்தருளினர்.

சேக்கிழார்சுவாமிகள் திருத்தொண்டர் பெரியபுராணம் பாடியருளுதற்கு 'உலகெலா முணர்ந் தோதற் கரியவன்' என்று நடராஜவள்ளலார் அடியெடுத்துக்கொடுத்தனர்.

சிதம்பரத்தில், சிவபெருமான் அந்தணர் வடிவுகொண்டு எழுந்தருளி மாணிக்கவாசகசுவாமிகளை அடைந்து, அவர் பாடிய திருவாசகத் தமிழ்மறையைத் தமது அருமைத் திருக்கரத்தால் ஏட்டில் எழுதி, அதன்மேல் 'உமது வாயால் நடராஜரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஒரு கோவை பாடுக' எனக் கேட்க, அவ்வாறே பாடிய திருக்கோவையாரையும் எழுதி, இறுதியில் 'மாணிக்கவாசகன் சொல்ல, அழகிய சிற்றம்பலமுடையார் எழுதியது' எனக் கைச்சாத்திட்டுக் கனகசபையின் பஞ்சாக்ஷரப்படியில் வைத்தருளினர் என்று மாணிக்கவாசகசுவாமிகள் சரித்திரம் கூறும்.

இன்னும் தேவாரத் தமிழ்ப்பாடல்களை சிவபெருமானைப் பரவையாரிடத்தில் தூதனுப்பியும், முதலையுண்ட பாலனை

அழைத்தும், என்பைப் பெண்ணாக்கியும், வேதங்களாற் பூட்டப்பட்ட கதவைத் திறந்தும் பற்பல அற்புதங்களைச் செய்தன.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொல்லோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

இன்னும் நம்பியாண்டார்நம்பிக்குப் பொல்லாப்பிள்ளையார் திருத்தொண்டத்தொகையின் பொருளை உபதேசித்தனர் எனவும் அறிகின்றோம்.

காஞ்சீபுரத்துக் குமரகோட்டத் தருச்சகராகிய கச்சியப்ப சிவாசாரியசுவாமிகளுக்கு "திகடசக்கரச் செம்முக மைந்துளான்" என அடியெடுத்துக்கொடுத்துக் கந்தசுவாமியார் கந்தபுராணம் பாடுவித்தருளினார் என்று பெரியோர் கூறுவர். இன்னோரன்ன வரலாறுகளால் தமிழின் தெய்வத்தன்மை அற்புதச்செயல் முதலியன தெள்ளிதிற் புலனாகும். தமிழின் பெருமை நோக்கியே தமிழ் என்பதை விசேடணம் கொடுத்து, செந்தமிழ், பைந்தமிழ் முதலியனவாக நந் தமிழ்ப்புலவர் வழங்குவர். இவ்வாறு மகத்துவம் மிக்க நற்றமிழைத் தற்போது பலர் இகழ்கின்றனர். இவ்வாறு இகழும் பாமரர்களைத் தாயைத் தூஷிப்பவர்கட்குச் சமமாகக் கூறலாம். ஆயிரம் நாப்படைத்துள்ளானாகிய ஆதிசேடனாலும் உரைத்தற்கரிய மகத்துவம் மிக்க தாய்மொழியாகிய தமிழைச் செவ்வனே அப்பியசிக்காமல் மற்றைப் பாஷைகளைக் கற்க அவாவுறலாமா? சிலர் இங்கிலீசு சிறிது படித்தவுடன் தமிழ் பேசுவதையே மறந்துவிடுகின்றனர். இங்ஙனம் மறந்தவர்கள் தம்மைத் தாமே மறந்தவர் ஆகின்றார்கள். ஓர்கால் தமிழ் பேச நேர்ந்தாலும் ஆங்கிலம் கலந்தே பேசுகின்றார்கள். இவர்களால் தமிழ் க்ஷீணித்துவிடுமோ என்று ஐயமும் ஏற்படுகின்றது. தாய்மொழி விருத்தியின்றித் தமிழ்நாடு முன்னேற முடியாதாகையால் தமிழ்த்தாய் வயிற்றிற் பிறந்த தனவான்களும், தார்மிகர்களும் செந்தமிழ்வளர்ச்சியில் ஊக்கங்காட்டுமாறு வேண்டுகின்றோம். அதற்கு மாதொருபாகனாகிய சிவபெருமான் கிருபை புரிக.

———

# ஊன் உணவு

[யாழ்ப்பாணம்: நாவலர் சைவப்பிரகாசவித்தியாசாலை ஆசிரியர் பிரமஸ்ரீ க. வை. ஆத்மநாத சர்மா அவர்கள் எழுதியது.]

உடம்பெடுத்த உயிர்களெல்லாம் தாந்தாங்கொண்ட உடலை வளர்ப்பதற்காகவும், அதனைத் தளரவிடாது நிலைப்படுத்துவதற்காகவும் பிறந்த நாள் முதல் இறக்கும் வரையும் உணவை உட்கொள்ளவேண்டியன. ஓரறிவு படைத்த நிலையியற் பொருட்களான தாவரம் முதல், படிமுறையானறிவேற்றம் பெற்றனவும் ஐயறிவோடு சிறப்புடைய பகுத்தறிவைப் பெற்ற மனிதரும் உயிர்களே. இவ்வுயிர்கள் தம் உடலைப் பேணுவதற்காகக் கொள்ளும் உணவு திடம், திரவம், வாயு என்னும் மூன்று பெரும்பிரிவினுள் அடங்கும். அவற்றுள் வாயுப்பொருளில் பிராணவாயு, கரிவாயு என்னுமிரண்டுஞ் சிறந்தன. தாவரங்கள் பகலிற் கரிவாயுவையும் இரவிற் பிராணவாயுவையும் உட்கொள்ளும். ஏனைய உயிர்கள் எப்போதும் பிராணவாயுவையே உட்கொள்ளுமியல்பின. திரவ உணவில் நீர்ப்பகுதி நெய்ப்பகுதி என இரண்டு உள. அவை தனித்தனியாகவும் திடப்பொருளானமையும் உணவுடன் சேர்ந்தும் எல்லா உயிர்களுக்கும் அவ்வவற்றிற் கேற்ற முறையில் உணவாகக் கூடியன. திடப்பொருளிலும் தாவர உணவென்றும் ஊன் உணவென்றும் வகுத்துக்கொள்ளலாகும். தாவரப்பொருளானமையும் உணவை ஆரத உணவு எனவும் அழைப்பர். ஆரத உணவென்பதற்குச் சுத்தபோசனம் என்பது பொருள். எனவே, தாவரப்பொருளானமையாத உணவெல்லாம் அசுத்தபோசனமென்பது சொல்லாமலே யமைகிறது. அதனால் ஊன் உணவு தூய்மையற்றதாகவே அதன் தகுதியும், அதனைத் துய்க்கும் அதிகாரியும் பயனும் யாவை என்பது ஆராயவேண்டிற்று. அதுவே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

இக் காலத்தில் வேதாகமாதிசாஸ்திரங்களை நம்பி, அவை விதித்தவற்றை அநுட்டிப்பவர் ஒருசாராரும், இயன்றமட்டும் நியாயத்தை ஆராய்ந்து அநுபவம் அநுமானம் என்பவற்றை ஆதாரமாகக் கொண்டு தாம் சரியெனக் காண்பவற்றைச் செய்பவர் மறுசாராரும், எது எவ்வாறிருப்பினும் தம் மனம்போனபடி நடப்பதே முறையாக நினைத்து ஒழுகுபவர் பிறிதும் ஒருசாராருமாக உலகத்தவர் முத்திறப்படுவர். இவருள் மூன்றாம் பிரிவினருக்கு இந்தக் கட்டுரை மாத்திரமல்ல, வேறெந்த ஆராய்ச்சியும் வேண்டப்படுவதன்று. எனவே, முதலிரு பகுதியாருக்கும் பொருந்துமாறு என் சிற்றறிவுக் கெட்டியவரையிற் சில கூற முயற்சிப்பேன்.

ஊன் உணவென்பது தாவரம் ஒழிந்த ஏனைய பிராணிகளின் தசையாலமைந்த உண்டியேயாகும். இந்த உணவு மனிதனுக்குப் பொருந்

துமா என்பது முதலில் ஆராயப்படவேண்டியது. மனிதன் பகுத்தறிவோடு கூடியவன். அதனால் உண்ணத்தக்கன இவை; உண்ணத்தகாதன இவை என்பதை அறியுமாற்றல் வாய்ந்தவன். ஆயுதங்களையும், நெருப்பு, நீர் முதலான இயற்கைப் பொருள்களின் வல்லமைகளையும் உணவு பதப்படுமாறு உபயோகிப்பவன். அவற்றின் உதவியினால் இக்கால மனிதர்களில் ஒருசாரார் தாவர உணவையே உண்பாரும், மறுசாரார் தாவர உணவும் ஊனுணவுங் கலந்து புசிப்பாரும், பிறிதுமொரு சாரார் ஊனுணவை மாத்திரமே மிசைவாருமாய் முத்திறப்படுவர். மனிதன் நெடுங்காலத்துக்கு நோயற்ற நிலையிற் சுகசீவியாகி வாழ்வதற்குத் தசைக்கொழுப்பும் உஷ்ணமும் நி[illegible]யாக உடலுக்கு வேண்டும் பொருள்களாகும். அவை உணவின் மூலமாகவே பெறப்படவேண்டியன. அவற்றை ஊனூட்டி (Nitrogen), இருந்தை (Carbon) என்னும் இரண்டுமே தாவல்லன. இவை இரண்டும் மனிதனுடைய உணவில் போதிய அளவிற்கு இல்லையானால், அஜீரணம், மலச்சிக்கல், உடற்சோர்வு முதலான பல கேடுகள் உண்டாகும். ஊனூட்டியும் இருந்தையும் சிறிதளவு தாவர உணவில் நிரம்பக் கிடைக்கும். அவை மிகப் பெருமளவான ஊனுணவில் மிக அற்பமாகவே இருக்கும். அதனால் மனிதனுக்குத் தாவர உணவே சிறந்தது என்பது பெறப்படும். ஒரு குறித்த அளவான இறைச்சியைச் சோதனை செய்தால் சரி பாதிப்பாகம் நீர் என்றும், எஞ்சியதில் ஒரு சிறு பாகம் நிணமென்றும், பிறிதுமொரு சிறு பாகம் இருந்தையென்றும், ஏனைய பகுதி வெறுங் கழிவுப்பொருள் என்றுந் தெரியவரும். அவ்வாறே முள்ளங்கி, செங்கிழங்கு, சிறுகிழங்கு, சர்க்கரைவள்ளிக்கிழங்கு, மரவள்ளிக்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, இராசவள்ளிக்கிழங்கு, பட்டாணி, துவரை, அவரை, உழுந்து, கடலை, கோதுமை, தினை, வாகு, குரக்கன், சோளம், கம்பு முதலாயினவற்றில் எதும் ஒன்றைப் பரிசோதித்தால் அவற்றில் ஒரு குறித்த மிகச் சிறிய அளவுக்குமேல் நீரும் கழிவுப்பொருளும் இல்லையென்பது தெரியவரும். இதனால் ஊனுணவு மனிதனுக்குத் தேவையான மிகச் சிலவற்றையும், வேண்டாத பலவற்றையும் கொடுக்கும் என்பது பெறப்படும். பெறப்படவே அது மனித உடலுக்குப் பொருந்தாதென்பது ஒரு முடிபாகிறது.

ஊன் உணவின் தகவு தகவின்மைகளை யறிவதற்கு அதனையே உண்ணும் மிருகங்களையும், அதனை உண்ணாது தாவரத்தையே உண்ணும் மிருகங்களையும் ஒப்புநோக்குவோம். புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா? யானை மறந்தும் ஊனை உண்ணுமா? அவை தத்தம் இயல்புக்கு ஏற்பவே உணவு கொள்ளுகின்றன. ஆயின், உடல் வன்மையில் பத்துப் புலி சேர்ந்தாலும் ஒரு யானைக்கு ஈடாகமாட்டா. எருது, குதிரை, யானை, காண்டாமிருகம், ஒட்டகம் என்பன தாவரப் பொருள்களையே உண்பன. இவற்றிற்குள்ள உடல் வலிமைக்குச் சமமான பலத்தைப்

புலாலுண்ணும் எந்தப் பிராணியிடத்திலும் காண்டலரிது. ஆனால், சிங்கத்தைக் கண்டு யானை அஞ்சவில்லையா? புலியைக் கண்டு எருது ஒதுங்கவில்லைய? அவை வலி குறைந்தனவாயின் எவ்வாறு அடக்கியாளுகின்றன? என்று சிலர் ஆக்ஷேபிப்பர். புலி, சிங்கம் என்பவற்றிற்குள்ள நகம், பல் முதலியவற்றைக் கண்டு ஏனைய பிராணிகள் அஞ்சுமேயன்றி, அவற்றின் உடல் வன்மையாலன்று என்பதுவே நாம் சொல்லத்தக்க சமாதானமாகும். மேலும், புலாலை உண்ணும் மிருகங்கள் மூர்க்ககுணமுடையன. தாவரங்களையே உண்ணும் பிராணிகள் பெரும்பாலும் சாந்தகுணமுடையனவாகவே காணப்படும். அவ்வாறே உணவு கொள்ளும் மனிதரும் அவ்வக் குணங்களைப் பெறுவர். இக்காலத்தில் மலிந்து காணப்படும் கொலைக்குற்றங்களின் மூலத்தை நுணுகி ஆராய்வோமானால், அவை நாடோறும் ஊனுணவுக்காக ஆடுகளையும் கோழிகளையும் வேறு பலவற்றையும் கைகூசாது மனம் நடுங்காது கொலைபுரியும் ஈனமக்களின் சம்பந்தமுடையனவாகவே மிகுதியுங் காணப்படும். சமீபத்தில் நிகழ்ந்த ஒரு கொலைவழக்கில் உயர்தர நீதிபதி ஒருவர் தமது முடிவுரையில் கொலைக்குற்றவாளியைப் பார்த்து, “இக்காலத்தில் உன்னைப் போன்றவர்கள் கத்தி, வாள் முதலிய கொலைக்கருவிகளைக் கூசாது உபயோகிக்கப் பயின்றுகொள்கின்றனர்” என்று கூறியதும் ஈண்டு குறிக்கத்தக்கது. ஊனுணவின் நிமித்தமான கொலைப்பயிற்சியும் அவ்வுணவை மிசைவதனால் நேரும் மிருக வியல்புஞ் சேர்ந்து மனிதனை மிருகமாக்கி உலகிற் பெருங் கேடுகளை விளைவிக்கின்றது.

இனி, கொலைப்பயிற்சி குற்றமுடையதேயானால் எவனோ ஒருவன் எங்கிருந்தோ கொன்று அனுப்பும் ஊனைப் புசிக்கலாமே என்பாருமுளர். தாம் பிராணிகளை வதைசெய்து அனுப்பும் ஊனை வாங்குவோர் உளர் என்ற மிடுக்கினாலன்றோ கொலையாளிகள் மேன்மேலும் அத் தொழிலை விடாது புரிகின்றனர். ஊனை விரும்புவோர் இல்லையாயின் பிராணிகளை வதைப்போரும் இலராவர். அதனால் நேரும் பாவமும் இல்லையாகும். ஊனுணவு மனிதனுக்குத் தகாதாயின் சுவையோடு கூடிய தசையுள்ளனவாகிய ஆடு, கோழி முதலியவற்றா லாம்பயனென்னை? எனச் சிலர் வினவுவர். மாதாபிதாக்களாக உள்ளவர்கள் தாம் பெற்ற பிள்ளைகளுட் சிலர் உலகிற்கு எதுவிதமான பயனைத் தராவிட்டாலும் எப்படி அப் பிள்ளைகளைத் தொலைக்கவோ, அழிக்கவோ விரும்பமாட்டார்களோ அப்படியே ஆடு, கோழி முதலியவற்றால் ஆம் பயன் பிறவொன்றும் இல்லையாயின், அவற்றை வாளா விட்டுவிடுதலே முறையாகும். ஊனுணவுக்காக நேரும் உயிர்க்கொலை பாவமென்பிரேல் தாவர உணவுக்காக அவற்றைப் பெறுதலும்—அவை ஓரறிவுயிராதாதலின், பாவந் தானே என்பார் இன்னுஞ் சிலர். தாவரங்களிலிருந்து தானியங்களையோ காய், பழம், இலை என்பவற்றையோ நாம் பறிக்கும்போதும்

அவை வருந்தவில்லை. பறித்த பின்னும் அவை வளர்கின்றன. ஆனால், எந்த ஆடு, அல்லது எந்தக் கோழி நாம் தசையை அரிந்தெடுத்த பின் உயிருடன் நின்றது? அது மாத்திரமா? ஆடு முதலியவற்றை வதைக்கும் போது அவை இடுகின்ற அவல ஓசையையும், விடுங் கண்ணீரையும், படுகின்ற துடிப்பையும் முறையே கேட்டவரும் கண்டவரும் அவற்றை மறக்க முடியுமா?

"அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
இம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றார்
அம்மா வெனுஞ்சத்தம் கேட்கின்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரையமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே.'

என்றார் பெரியோர்.

இதனைக் குறித்தே திருவள்ளுவநாயனாரும்

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்." என்றருளினர்.

அதனாலேயே "புலையுங் கொலையுங் களவுந் தவிர்" என்றார் ஔவைப் பிராட்டியார்.

தாவரங்கள் தத்தம் இனவிருத்திக்காகப் பல வித்துக்களை ஆக்கி, அவற்றை பரப்புகின்றவர்களுக்குக் கூலியாக அமையுமாறு சுவையோடு கூடிய பழங்களையும் ஆக்கி, அவற்றுள் அவ்விதைகளை அமைத்து மனிதனுடைய செய்கையை எதிர்பார்த்து நிற்கின்றன. அதனால் தாவரப் பொருள்களை மனிதன் உபயோகிப்பது தாவரங்களுக்குத் தீங்கிழைக்காமை மாத்திரமன்றி அவற்றிற்கு உதவி புரிவதாகவும் அமைவதைக் காணலாம். ஆதலால், தாவர உணவில் பாபமே இல்லையாகும்.

'பசுப்பாலைக் குடிப்பது பாபமில்லையாம்; கோழிமுட்டையைத் தின்பது பாபமாம், இதுவென்ன பேதமை!' என்பார் சில நவீனர்கள். பாலிலும் பசுவின் கொழுப்புக் கலந்திருக்கிறது. முட்டையிலும் கோழியின் கொழுப்பு இருக்கிறது. ஆதலின் இரண்டுஞ் சமமே என்பது அவர்கள் கொள்கை. பாலானது கன்றின் போஷிப்பிற்காகவும், மேலதிகமான பால் பசுவை வளர்ப்போரின் உபயோகத்திற்காகவும் பசுவினால் இரங்கிச் சுரந்து தரப் பெறுவது. மேலதிகமான பாலை மனிதன் உபயோகிக்காது விடின் அது வறிதே சிதையுமன்றி அப் பசுவுக்காவது வேறெவ்வகையிலாவது பயன்படாது. மேலும், மனிதன் பாலைக் கறக்கும்போது பசு வருந்தவில்லை; அவனை வெறுக்கவில்லை; அவனை அன்போடு அழைக்கிறது. முட்டையெனிலோ, கோழி தன் இன விருத்திக்காகத் தான் கொண்ட கருவைத் தன் இயல்பின்படி முட்டையாக இடுவது. குஞ்சு வெளிப்படுதற்குதவியாகக் குறித்த

காலவெல்லை வரையும் சூடு பிறக்கும்படி முட்டையின்மேலிருந்து கோழி அடை காத்துவருகிறது; முட்டையை அபகரிக்க வருபவர்களை எதிர்க்கிறது. மனிதன் முட்டையைக் கொடுக்காவிட்டால் அதிலிருந்து உயிர் உள்ள ஒரு குஞ்சு உற்பத்தியாகிறது. அதனாலேயே உயிரை அதஞ் செய்த பாபம் முட்டையை உடைப்பதில் உண்டாகிறதென்க. இன்னும் பாலும் முட்டையும் சமமெனக் கொள்ளுவோர், மனைவியும் மகளும் பெண் என்ற வகையிற் சமந்தானே என நினைப்பாரை ஒப்பர் என்றெண்ணி அறிந்தடங்குவாராக. எனவே, பசுப்பால் ஒருபோதும் ஊனுணவின்பாற்படாது. அது மனிதருக்குப் போஷிப்பைத் தருவதும் பாபமற்றதும் சாஸ்திரசம்மதமானதும் யுத்திக்கும் அனுபவத்துக்கும் பொருந்துவதுமாகிய மிகச் சிறந்த ஓர் உணவாகும்.

ஊனுணவு மனித உடம்பில் நேரே சேருகிறதென்றும் தாவர உணவு மாமிசமாக மாறியபின்பு தான் மனிதனுக்குப் பொருந்துகிறதென்றும் அதனால் ஊனருந்துவதே மிக நல்லதென்றும் சிலர் கூறக் கேட்டிருக்கிறேம். அவர்கள் உடற்கூறு அறியாப் பேதைகளேயாவர். ஏனெனில், ஆராய்வாம்:—

நாம் உணவை அருந்தும்போது முதலில் அது வாயினாலே நன்கு மெல்லப்படும். அப்பொழுது வாயிலுள்ள உமிழ்நீர்க் கோளங்களில் இருந்து நீர் ஊறி உணவுடன் கலந்து உள்ளே புகும். குரல்வளைக்குப் பின்புறமுள்ள அன்னவாகினி (Gullet) என்னும் குழாய் வழியாக அது இரைப்பையை அடையும். பின்பு இரைப்பையின் வாய் நன்கு மூடிக் கொள்ளும். இரையைக் கொண்டதும் பை சற்று நெளிந்து கொடுக்கும். நமது நாவின் மேழுள்ள பாகம் போலவே இரைப்பையினுள்ளுங் காணப்படும். அவ்வாறு பிரகாசத்தோடு கூடிய சதைப் பூச்சில் (Inner coat) அளவற்ற சிறு குழாய்கள் கண்ணுக்குத் தெரியாவண்ணம் செறிந்திருக்கும். அக் குழாய்களிலிருந்து ஒருவித நீர் ஊறி உணவுடன் கலக்கும். அந்த நீருக்குச் சீரணரசம் (Gastric juice) என்று பெயர். உணவானது அதனுடன் கலந்து மசிந்து பால் போலாகும். அதன்பின் இரைப்பையிலுள்ள பிலத்துவாரம் (Pylorus) என்னும் ஒரு வாயில் திறக்கும். அது வழியாக அன்னப்பால் குடரை அடையும். ஆனால், நமது உணவிலுள்ள நெய் முதலாயின இரைப்பையில் மசியாமல் அன்னப்பாலுடன் சேர்ந்து குடரை யடையும். பின்பு அங்கு ஊறிவரும் பித்தநீர், சுவைநீர் என்பவற்றால் மசிந்து சீரணமாகும். இவ்வாறு பதப்படுத்தப்பட்ட உணவுச் சாரமே இரத்தக்குழாய்களின் மூலமாக இரத்தாசயத்தை யடைந்து நல்லிரத்தமாய் மாறுகிறது. சுத்தமான இரத்த மிகுதியால் தசை வளரவேண்டுமேயன்றி, நாம் உணவாகக் கொள்ளும் ஆட்டிறைச்சி முதலாயின நமது தசையோடு ஒருபோது நேரே சேராது. இவ்வுண்மைகளை யுணராது கூறும்

வோர் பேதையரன்றி வேறியார்? ஆகையால், கூரிய நகம், பல், அலகு, ஒடுங்கிய குடர் முதலான விசேஷ உறுப்புக்களைப் படைத்த சில மிருகங்களும் பறவைகளுமே ஊனுணவை உண்ணவேண்டியனவாகும்.

இதுகாறுங் கூறியவாற்றால் ஊனுணவு இன்னதென்பதும், மனிதனுடைய உடல் வளர்ச்சிக்கு வேண்டும் பொருள்கள் இவையென்பதும், அவை ஊனுணவில் மிகக் குறைந்த அளவாகவும் தாவர உணவில் மிக அதிகமாகவும் அமைந்திருக்கின்றனவென்பதும், ஊனுணவு தமோகுண விருத்தியையும் தாவரஉணவு சத்துவகுணவிருத்தியையும் ஆக்க வல்லனவென்பதும், ஊனுணவைப் பெறுவதில் நேரும் பரிபவம் இத்தகையதென்பதும், தாவரஉணவைப் பெறுவதில் எவருக்கும் எவற்றிற்கும் ஒரு வருத்தமுமில்லையென்பதும், பசுப்பால் மனிதனுக்குச் சிறந்த உணவென்பதும், மாமிசம் சதையோடு சதையாகச் சேருமென்பது உடற்கூறறியார் பேச்சென்பதும், உணவு உடம்பிற் செறியும் வகை இவ்வாறு என்பதும், ஊனுணவு சில மிருகம் பறவைகளுக்கு மாத்திரம் உரியதென்பதும் பெற்றாம்.

ஆகவே, பகுத்தறிவு படைத்த மக்கள் தம்மை விலங்கினத்திலும் மேம்படுத்த விரும்பினால் எந்தவகையிலும் பயனற்றதாகிய ஊனுணவை அறவே விலக்கித் தாவர உணவை விருப்பத்தோடு தாமும் உண்டு பிறருக்கும் ஊட்டிவர முயற்சிப்பாராக.

---

# உபநிஷத்துகளின் ஸாரம்

[மயிலை: கோ. ஷண்முகசுந்தரமுதலியார் அவர்கள் எழுதியது]

## க. ஈசோவாஸ்ய உபநிஷத்து

இதில் சுலோகம் கஅ.

காரணம்:—ஈசோவாசமென்று ஆரம்பிப்பதால் அப் பெயர் பூண்டது. ஸ்வாயம்புமனுவால் கண்டுபிடிக்கப்பட்டது.

கருத்து:—சிவசூரிய ரூபமாயிருத்தலால் அதனைத் தியானித்துப் புருஷார்த்தமடையவேண்டும்.

## உ. கேநோபநிஷத்து

இது நான்கு கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்கண்டம் சுலோகம் கூ. உ-வது கண்டம் சுலோகம் ரு. ந-வது கண்டம் சுலோகம் கஉ. ச-வது கண்டம் சுலோகம் கூ. ஆக சுலோகம் நரு.

காரணம்:—கேந என ஆரம்பித்தல், வினவுதல் முதலியதால் இப் பெயர் பூண்டது. பிரமாவினால் சொல்லப்பட்டது. கேந - வினா.

கருத்து:—எல்லா வல்லபத்திற்கும் சிவமே காரணம். குரு சிஷ்ய ஸம்வாதம். யக்ஷரூபமாகச் சிவன் வல்லபம் காட்டியது.

### ௩. கடோபநிஷத்து

இதில் இரண்டத்தியாயம். ஒரு அத்தியாயத்துக்கு ௩ வல்லியாக ஆறு வல்லி யுடையது. மொத்தம் சுலோகம் ௧௨௦.

௧-வது அத்தியாயம் ௧-வது வல்லி ௨௧. ௨-வது வல்லி ௨௫. ௩-வது வல்லி ௧௭. ஆக சுலோகம் ௭௧.

௨-வது அத்தியாயம் ௧-வது வல்லி ௧௫. ௨-வது வல்லி ௧௫. ௩-வது வல்லி ௧௯. ஆக சுலோகம் ௪௯.

காரணம்:—கட - தேகத்தில் ஆகாசம் போல் ஆத்மஸ்வரூபம் இருப்பதால் இப் பெயர் பூண்டது.

கருத்து:—ஆத்மஸ்வரூப விசாரணை. யமனுக்கும் நசிகேதுவுக்கும் சம்பாஷணை. ஶ்ரேயஸ் ப்ரேயஸ் (ஶ்ரேயஸ் - மோக்ஷம், ப்ரேயஸ் - போகம்) என்பது.

### ௪. பிரஶ்நோபநிஷத்து

௧-வது ப்ரஶ்னம் ௧௫. ௨-வது ப்ரஶ்னம் ௧௩. ௩-வது ப்ரஶ்னம் ௧௨. ௪-வது ப்ரஶ்னம் ௧௧. ௫-வது ப்ரஶ்னம் ௭. ௬-வது ப்ரஶ்னம் ௮. ஆக ப்ரஶ்னம் ௬-க்குச் சுலோகம் ௬௬.

காரணம்:—ஆறு ரிஷிகுமாரர்களால் கேள்வி கேட்கப்பட்டதால் இப் பெயர் பூண்டது. ப்ரஶ்னம் - கேள்வி.

அறுவர்களின் பெயர்:—

௧. கபந்தி, ௨. வைதர்ப்பி, ௩. கௌசல்யர், ௪. ஸௌர்யாணி, ௫. சத்யகாமர், ௬. சுகேசர். இவர்கள் பிப்பிலாதமஹாரிஷியைக் கேட்டார்கள்.

கருத்து:—௧. கபந்தி கேள்வி. இந்த லோகத்திய ஜனங்கள் எதனிடத்திற் பிறக்கப்பட்டார்? உத்தரம். அன்னமயத்தா லென்பது.

௨. வைதர்ப்பி கேள்வி. எதனுல் தேவர்கள் ஸ்தாவர ஜங்கமங்களை உண்டுபண்ணுகிறுர்கள்? அதனைப் பிரகாசிக்கச்செய்கிறுர்கள்? உத்தரம். ப்ராணமயத்தா லென்பது.

௩. கௌசல்யர் கேள்வி. பிராணன் எவ்விதத்தால் உண்டாகி ஆதாரமாகிறது? உத்தரம். ஜீவாத்மாவில்.

௪. ஸௌர்யாணிமுனிவர் கேள்வி. ஜீவனுக்கு அறிவு எப்படி விளக்கப்படுகிறது? உத்தரம் - பிரமத்தால் விளங்குகிறது.

௫. ஸத்யகாமர் கேள்வி. பிரணவத்தை எப்படி உபாசித்தால் எவ்விடம் அடையலாம்? உத்தரம். பிரணவம் - அ உ ம என்று மூன்று மாத்திரை. அவற்றில் தனியே அ - ருக்குவேதம், உ - யஜுர்வேதம், ம - ஸாமவேதம். இவை முறையே பூ - சந்த்ர -

ஸூர்யலோகம் அடைவிக்கும். இதை ஒன்ருய் ஓம் என்று உச்சரித்தால் ப்ரம்மபதம் கிடைக்கும். ப்ரம்மபதம் - சத்யலோகமன்று, மோக்ஷம்.

ரு. ஸாகேசர் கேள்வி - ஜீவாத்மா ப்ரமத்தை எப்படி அறியும்? உத்தரம். புருஷன் - ஜீவாத்மா, பிரமத்தால் அறிவிக்க அறியப்படுவன். ஸகலதையும் பிரமம் விளக்குகிறது.

## ரு முண்டக உபநிஷத்து

இது ங முண்டகமும், ரு காண்டமுமாகவுள்ளது. முண்டகம் ஒன்றுக்கு உ காண்டம். மொத்தம் ங முண்டகமும் ருரு சுலோகம்.

க-வது முண்டகம்: முதற்கண்டம் க0 சுலோகம். உ-வது காண்டம் கங சுலோகம். ஆக உங சுலோகம்.

உ-வது முண்டகம்: முதற்காண்டம் க0 சுலோகம். உ-ம் காண்டம் கஉ சுலோகம், ஆக உஉ சுலோகம்.

ங-வது முண்டகம்: முதற்காண்டம் க0 சுலோகம். உ-ம் காண்டம கக சுலோகம். ஆக உக சுலோகம்.

காரணம்:—முண்டகமான தாமரைமலரில் வீற்றிருப்பவரான ப்ரம்மாவினல் தன் குமாரனுக்குச் சொன்னது. மூத்த குமாரன் அதர்வன். அவர் ஆங்கிருக்கும், அவர் ஸத்யவாஹருக்கும், அவர் ஆங்கிரஸருக்கும், அவர் மஹாகிருசஸ்தர் என்னும் சௌநகருக்கும் உபதேசித்தனர்.

கருத்து:—ப்ரமஹத்தை உபாசித்து அதனிடத்தில் மிகவும் ஆசை உண்டானவனுக்கு மோக்ஷங் கைகூடும்.

## சு. மாண்டுக்ய உபநிஷத்து

இது ச காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்காண்டம் சுலோகம் உ. உ-வது சுலோகம் டு. ங-வது சுலோகம் ச. ச-வது சுலோகம் க. ஆக சுலோகம் கஉ.

காரணம்:—மண்டூகமாய் இருந்து வருணனுற் சொல்லப்பட்டது. மண்டூகம் - தவளை.

கருத்து:—ஓங்காரத்தைத் தியானிக்கவேண்டும். அது ச பிரிவாய் இருக்கின்றது. அதாவது, அ-உ-ம-நாதம். இதற்கு முறையே விஸ்வன், தைஜஸன், ப்ராஞ்ஞன், ப்ரம்மம் எனப் பொருள். ப்ரமத்தை அடையச்செய்யும். அதனல் பிறவி அற்று மோக்ஷமுண்டாம்.

## கௌடபாதகாரிகை

இது உகடு சுலோகங் கொண்டது. க-வது ஆகமப்ரகரணம் சுலோகம் உகூ. உ-வது வைதத்யப்பிரகரணம் சுலோகம் ஙஅ. ங-வது

அத்வைதப்பிரகரணம் சுலோகம் சஅ. ச-வது சாந்திப்பிரகரணம் சுலோகம் க00. ஆக சுலோகம் உகடு.

காரணம்:—கௌடபாதரால் செய்யப்பட்ட சுலோகம். காரிகை - சுலோகம். இதை ஈஸ்வரன் தான் உபதேசிக்கும் அவர்களைப் பார்த்துச் சொன்னதாகச் சொன்னது.

க. ஆகமப் பிரகரணம் - அறிவுக்குக் காரணம் ஓங்காரம்.

உ. வைதத்யப் பிரகரணம் - பிரபஞ்சம் பொய்.

ங. அத்வைதப் பிரகரணம் - மெய் இது

ச. அலாதசாந்திப் பிரகரணம் - மெய்யான தன்மைக்கு விரோதிகளான ஆக்ஷேப சமாதானங்கள். இதனால் அவித்தை வித்தையால் நீங்கும்.

## எ. தைத்ரிய உபநிஷத்து

ச-வது சிக்ஷாவல்லி அனுவாகம்: கஉ. உ-வது ஆனந்தவல்லி கூ. ங-வது ப்ருகுவல்லி கூ. ச-வது நாராயணவல்லி இஉ.

காரணம்:—ப்ரம்மா வருணனுக்குபதேசம். வருணன் - தைத்ரீயன். வருணன்பிள்ளை ப்ருகுவை நோக்கிச் சொன்னது. ஷஷ்டப்ரஸ்னம் நாராயணனைப்பற்றிச் சொல்லியது.

## அ. ஐதரேய உபநிஷத்து

முதற்கண்டம் கச. உ-வது கண்டம் ச. ங-வது கண்டம் ச.

## கூ. ப்ருஹதாரண்ய உபநிஷத்து

இது மூன்றும் அத்தியாயம் முதல் எட்டாம் அத்தியாயம் வரை இருக்கிறது. இது ப்ராம்ஹணம் என்று பிரிக்கப்படுகிறது. ஆதலால், சுலோகங்களின் கணக்கு வித்தியாசமாயிருக்கிறது.

காரணம்:—ரிஷிகள் காட்டில் ஓதினமையால் ஆரண்யமென்று பெயராயிற்று. பெரிய கிரந்தமாதலால் ப்ரஹத் என்று பெயர். இரண்டுஞ் சேர்த்துப் பிரஹதாரண்யமென்று பெயர் வழங்குகிறது. இதன் முகவுரையில் இதற்கும் உபநிஷத்திற்கும் பொருள் சொல்லப்படுகிறது.

கருத்து:—அநேக ரிஷிகளின் ஸம்வாதம். யாஞ்யவல்கியர் உத்தரம் விசேஷம். காசியில் ஜனகரின் சந்தேகத்தை யாஞ்யவல்கியர் நிவிர்த்தித்தனர். அவருக்குப் பிரஹ்மஞான உபதேசமும் செய்தார்.

## க0. சாந்தோக்கிய உபநிஷத்து

இதில் க0 பிரபாடகம் இருக்கிறது.

காரணம்:—சந்தசு அல்லது ஸசமத்தால் ஞானமுண்டாகும்.

---